10th September 1960]

பேப்பர்கள் அங்கும் இங்கும் ஓடி அலேந்துகொண்டிருக்கிறது. டிபார்ட்மெண்டை கண்டித்து தாமதமில்லாமல் உடனே வேலே செய்யவேண்டுமென்று அமைச்சர் அவர்கள் எழுதுவார்களா? படித்துப் பார்த்ததில் அமைச்சர் அவர்கள் என்ன யோசிக்கிறார்கள்?

THE HON. SRI M. A. MANICKAVELU: ஆரம்ப காலத்தில் கொஞ்சம் மெதுவாகத்தான் வேலே நடக்கிறது. கொஞ்சம் ஆரம்பித்து "மொமெண்டம்" வந்தபிற்பாடு சீக்கிரம் விரைவாக நடக்கிறது. ஸ்ரீரங்கபுரத்தில் "கண்டிரிபியூஷன்" கொடுக்கவில்லே. "கண்டிரிபியூஷன்" கொடுத்தால் அதற்கு மேல் வேலே நடக்கும்.

SRI N. R. THIAGARAJAN: ஸ்ரீரங்கபுரத்தில் "கண்டிரிபியூஷன்" கொடுப்பதாக ஏற்கனவே எழுதிக்கொடுத்து விட்டோம். $5\frac{1}{2}$ ஆண்டுகள் ஆகியும் இது சம்பந்தப்பட்ட பேப்பர் இங்கும் அங்கும் அலேந்துகொண்டே இருக்கிறது. சீக்கிரம் வேலே செய்யும்படி டிபார்ட்மெண்டை கண்டித்து ஒரு சுற்றறிக்கை அனுப்புவார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU: என்னிடம் இருக்கிற தகவல் "The work will be started as soon as the requisite contribution is forthcoming from this particular village".

*Corruption cases*

*591 *Q.*—SRI A. VEDARATHNAM: கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) 1960-ல் நம் மாநில ஒழுங்கு நடவடிக்கைக்கான நியாய சபைக்கு (Tribunal for Disciplinary Proceeding) லஞ்ச ஊழலேப்பற்றி எத்தனே வழக்குகள் விசாரணைக்காக அனுப்பப்பட்டன?

(ஆ) அவற்றுள் தண்டனே அடைந்தவர்கள் எத்தனே பேர்?

(இ) குற்றங்களின் விவரமென்ன?

(ஈ) நிரபராதிகள் எத்தனே பேர்?

(உ) நிரூபிக்க முடியாத குற்றச் சாட்டுகள் எத்தனே?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) Thirteen cases have been referred to the Tribunal for Disciplinary Proceedings for enquiry from 1st January 1960 to 4th August 1960.

(*b*) *to* (*d*) It is not possible to furnish the information as all the cases are pending enquiry.

(*e*) It will not be in the public interest to divulge the details of the charges in the cases referred to the Tribunal for Disciplinary Proceedings.

SRI A. VEDARATHNAM: லஞ்ச ஊழல்களை விசாரித்து முடிவு செய்ய இத்தகைய சிறந்த ஸ்தாபனம் இருந்தும் சில அரசியல் கட்சிகள் சர்க்காரில் சர்வம் லஞ்சம் மயம் என்று பிரசாரம் செய்கிறார்களே, அவர்களிடமிருந்து "ஸ்பெஸிபிக்காக" இந்த ஸ்தாபனத்திற்கு ஏதேனும் லஞ்சம் வாங்கியது பற்றி புகார்கள் வந்திருக்கின்றனவா? அதன்பேரில் அரசாங்கம் ஏதேனும் நடவடிக்கை எடுத்திருக்கிறதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இத்தகைய புகார்களை விசாரிப்பதற்கு டிரிபியூனல் ஒன்றும் இல்லை.

*Sri Kailasanathar temple (Velvimangalam)*

*592 Q.—SRI K. R. VISWANATHAN: Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the years for which no managing trustee for the Sri Kailasanathar temple in Velvimangalam village, Perambalur taluk, was appointed during the period 1949 to 1959 and the reason therefor;

(*b*) the date on which the last managing trustee was appointed;

(*c*) whether any allegation was made that this managing trustee was the 'de jure' one while the 'de facto' trustee was the one who is closely related to him and he was removed from service for misbehaviour and irregularities; and

(*d*) if so, whether it was enquired into?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) There were managing trustees from 1949–59.

(*b*) 9th February 1959.

(*c*) & (*d*) Yes, Sir.

SRI K. R. VISWANATHAN: தலைவர் அவர்களே, 1959-ம் ஞ பெப்ரவரி மாதம் 9-ம் தேதியில் நியமிக்கப்பட்ட மானேஜிங் டிரஸ்டி, அதற்கு முன்பு நியமிக்கப்பட்ட மானேஜிங் டிரஸ்டி அந்தக் கோயிலில் சார்ஜ் வாங்குவதற்கு முன்னாலேயே அவசரம் அவசரமாக நியமிக்கப்பட்டாரா? அம்மாதிரி நியமிக்கப்படுவது சட்ட விரோதமல்லவா? அதற்காக சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறது என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இந்தச் சட்டப்படி டிரஸ்டிகளை ஏரியா கமிட்டி நியமிக்கிறார்கள். அதில் ஏதாவது தவறு இருந்தால் அப்பீல் செய்யப்படுகிறது. சட்டப்படி அப்பீல் வந்தால் அது கவனிக்கப்பட்டு, என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படவேண்டுமோ அம்மாதிரி நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படுகிறது. இந்த விஷயத்தில் டிரஸ்டிகளுக்குள்ளே ஒருவருக்கொருவர் கட்சி, ஒருவருக்கொருவர் ஒத்துழைப்பு கிடையாது. இந்த நிலையிலே அறநிலைய பாதுகாப்பு இலாகாவினர் இதை ஒரு நிர்வாக அதிகாரிக்கு கொஞ்ச காலத்திற்கு விட்டுவிடலாம் என்று உத்தரவு போட்டார்கள். அதை நிறைவேற்றிக்கொண்டு வருகிறார்கள்.